உ



# கடவுளும் கோயிலும் சில கேள்விகள்

அவனருள் வெளியீடு - 44

ஜூன் 1998

அறிய முற்படாததால் தான் பெரும்பாலான கோவில்களிலும் குடமுழுக்கு வைபவங்களில் முக்கிய அங்கமான வேள்விகள் குறைக்கப்பட்டு அநாவசியமான ஆடம்பரங்கள் அதிகமாகி விட்டன.

காரில் உள்ள மின்கலப்பெட்டி (battery) வலுக் குறையும் போது அதற்கு வெளிப்புறத்தில் வர்ணம் அடிப்பதைவிட recharge அதாவது செறிவூட்டுவது தான் முக்கியம் என்பதை யாவரும் அறிவோம். இதுபோலவே தான், சமுதாயத்தின் மின்கலப் பெட்டிகள் போன்ற ஆலயங்களிலும், குடமுழுக்கு களின் போது *அகச் செறிவு* ஊட்டப்பட வகை செய்த பின்னரே *புறப்பொலிவு* சேர்ப்பதற்கு முக்கியத்துவம் அளிக்க வேண்டும்.

நாம் சாப்பிடும் மருந்துகளில் Double Strong (DS) இரட்டிப்பு சக்தியுடைய மாத்திரைகள் இருப்பது போலவும், Slow and Long Discharge (SLD) தொடர்ந்து நிதானமாக நெடுநாள் செயல்படக்கூடிய மாத்திரைகள் இருப்பது போலவும் ஆலயக் கும்பாபிஷேகச் செயல்பாடுகள் நெடுங்காலம் பயனளிக்கும் சக்தி வாய்ந்தவை. பண்டைப் பழுதுகளை நீக்குவதோடு எதிர்வரக்கூடிய இன்னல்களையும் தவிர்க்கக் கூடியவை.

அளப்பரிய நன்மைகளைப் பல்வகைகளிலும் பயக்கக் கூடிய திருக்குடமுழுக்கு வழிபாட்டினை எல்லா ஆலயங்களிலும் ஆலயக் கோட்பாடு நூல்களான ஆகமங்கள் பரிந்துரைக்கும் வகையில்,

12 வருடத்துக்கு ஒரு முறையாவது நடத்தி,
நாமும், நம் வீடும், நாடும், நானிலமும்
எல்லா நலனும் பெற்று சிறப்போமாக.

## தெய்வத்துக்குத் திருமணம் ஏன்?

மனிதரிடையே ஆணுக்கும், பெண்ணுக்கும் திருமணம் என்ற வழக்கும், சடங்கும் இல்லாமலிருந்தால் கோயில்களிலும் தெய்வங்களுக்கு திருக்கல்யாணம் என்ற திருவிழா கண்டிப்பாகத் தேவையில்லை.

ஒவ்வொரு பெண்ணும் பல ஆண்களால் ஈர்க்கப்பட்டாலும், ஒவ்வொரு ஆணும் பல பெண்களால் கவரப்பட்டாலும் இந்த இயற்கையான கவரப்படுதலை, இருபாலரும் திருமணமானவுடன் விரும்புவதில்லை.

மனைவி பிற ஆண்களைக் கண்ணால் கூட பார்க்கக் கூடாது என்று கணவனும், தன் கணவன் பிற பெண்டிரை நோக்கக்கூடாது என்று மனைவியும் நினைக்கும் அளவுக்கு, இருவருமே அடுத்தவரை தங்கள் தனிச் சொத்தாகக் கருதுகின்றனர். இந்நிலைமை இருக்கும் வரையும்,

ஆண்– பெண்ணிடையே பால் நாட்டம் ஏற்படும் போது, பல மிருகங்களைப் போல, அவ்வப்போதே, அங்கங்கேயே உறவு கொள்வதை மனிதர் தவறாக நினைக்கும் வரையும்,

இயற்கைக் கவர்ச்சியால் சண்டைகள் வராதிருக்கவும், ஆரோக்கியமான வாழ்வு மற்றும் சமுதாய அமைதியைக் கருதியும் நாம் ஆண்–பெண் உறவில் கட்டுப்பாட்டையும், நெறியான – வாழ்க்கையையும் விரும்பும் வரையிலும்

*திருமணம் என்ற நெறிப்படுத்தும் வழக்கம்* மனித சமுதாயத்திற்குக் கண்டிப்பாகத் தேவையே.

திருமணம் என்பது 1) சமுதாய மனிதர்க்கிடையிலான வாழ்க்கை அமைப்புநெறி 2) இருவர் இல்லறம் புகுவதை